

''ஒன்றுமில்லை. எங்கள் ஊர் மது மிக விசேஷமானது. மேலைமங்கலத்து மதுவென்றால் அதை நினைத்துப் பார்த்தே மயங்குபவர்கள் உண்டு.''

''அதனால்...?''

''நினைத்தாலே நிதானம் தவறு மென்றால் பருகினால் கேட்க வேண்டுமா?''

''வேண்டியதில்லை. உங்கள் ஊர் மது சிறந்ததுதான். அதற்கும் நீர் பேசியதற்கும் என்ன சம்பந்தம்?''

''என் பேச்சுக்கும் அதற்கும் எந்தவித சம்பந்தமுமில்லை. ஆனால்...?''

''ஆனால் என்ன ஆனால்?''

''தங்கள் பேச்சுக்கும் அதற்கும் ஏதாவது சம்பந்தமிருக்குமோ என்று அடியேனுக்கு ஒரு சிறு சந்தேகம்.''

அடிகளாரின் பேச்சுக்களில் புதைந்து கிடந்த அர்த்தம் அப்பொழுது தான் வீரபாண்டியனுக்கு மெள்ள மெள்ள உதயமாகத் தொடங்கியது. ஆகவே ''பேய் பண்டாரம்! குடி வெறியில் நான் உளறுகிறேனென்பது உன் அபிப்பிராயமா?'' என்று கர்ஜித்தான்.

அடிகளார் பயப்படுவதுபோல் பாசாங்கு செய்து கொண்டு, ''அப்படிச் சொல்ல இந்த அடிகள் மடையனா? அப்படிச் சொல்லவில்லை, மன்னவா! சொல்ல இஷ்டமுமில்லை. ஆனால் திரும்பத் திரும்பத் தாங்களே ருசு அளிக்கிறீர்களே!'' என்றார்.

''ருசுவா? என்ன ருசு?''

''இந்த ஊரில் என்னை யாரும் மரியாதைக் குறைவாகக் கூப்பிடுவது கிடையாது. எங்கள் மன்னர் கூட 'அடிகளாரே' என்று மிகப் பணிவுடன் தான் அழைப்பார். ஆனால் நீங்கள் பேசுவதைப் பார்த்தால் நிதானத்திலிருக்கிற மனிதன் பேசும் பேச்சாகக் காணோம். அதனால்தான் சந்தேகித்தேன்.''

''என்ன சந்தேகிக்கிறீர்?''

''கொஞ்சம் அதிகமாகப் போய் விட்டதோ என்று.''

வீரபாண்டியன் அடிகளாரை நோக்கி ஓர் அடி எடுத்து வைத்தான். அவன் கையும் இடைக் கச்சையிலிருந்த உடைவாளை நோக்கிச் சென்றது. அவன் உத்தேசத்தைக் கண்ட அடிகளாரும் பின்னால் சிறிது நகர்ந்து, ''மதுரை மன்னனே! தமிழ் மறையோதும் அடிகளார்களைத் தாக்குவது பெருந் தீது. இது உனக்குத் தெரியாதா?'' என்றார்.

''தாக்கப் போவதில்லை. கொல்லப் போகிறேன்!'' என்று சொல்லிக் கொண்டே, அவரை நோக்கி உருவிய உடைவாளுடன் வந்தான் பாண்டியன்.

அடிகளார் பக்கவாட்டில் நகர்ந்து கொண்டே ''மன்னவா! தமிழ் மறையாம் திருக்குறளை நீ படிக்க வில்லையா?'' என்றார்.

''படிக்க வேண்டிய அவசிய மில்லை.''

''அவசியமிருக்கிறது. அப்பொழுதுதான் கொலையின் தன்மை எத்தன்மையதென்று உனக்குத் தெரியும். வள்ளுவர் கூறுகின்றார்...''

''கூறுகின்றாரா? கூறட்டும். வள்ளுவரைக் கூறும் உன் நாக்கை முதலில் துண்டிக்கிறேன்.''

''துண்டித்தால் உனக்குத் தேவையானது கிடைக்காது மன்னவா!''

இதைக் கேட்டதும் வீர பாண்டியன் சட்டென்று நின்றான். அடிகளார் தன்னிடம் ஏதோ கூற முயல்கிறாரென்றும் அவரிடம் ஏதோ ரகசியம் சிக்கியிருக்கிறதென்றும் ஊகித்துக் கொண்டான். ஆகவே கேட்டான், ''என்ன அது?'' என்று.

''கேள் மன்னவா! வள்ளுவர் கூறுகின்றார்: 'அறவினை யாதெனிற் கொல்லாமை கோறல் பிறவினையெல்லாம் தரும்' என்று.'' எனத் தனது சாதுர்யத்தைக் காட்ட முயன்ற அடிகளார் மேலும் தன் பாண்டித்தியத்தை விளக்கி அப்பாட்டுக்கு அர்த்தமும் சொன்னார்: ''அறவினை யாதெனில்—தர்மமான மார்க்கம் எதுவென்றால், கொல்லாமை—கொல்லாதிருத்தல், கோறல்—கொல்லுதல், பிறவினை எல்லாம் தரும்—மற்றப் பல கெடுதல்களை விளைவிக்கும்.''

அடிகளாரின் குறளையோ அர்த்தத்தையோ விரும்பாத பாண்டிய மன்னன் அவர் முடிக்கும்வரை சும்மா இருந்துவிட்டு, ''இதை எதற்காகச் சொல்லுகிறீர்?'' என்று கேட்டான்.

பாண்டியன் பேச்சில் மரியாதை உதயமாவதைக் கண்ட அடிகளாரும் மரியாதையாகப் பேசத் தொடங்கி, ''இப்பொழுது நீங்கள் என்னைக் கொலை செய்ய முயன்றீர்கள் அல்லவா?'' என்று வினவினான்.







இந்த இரண்டு படங்களுக்கும் குறைந்தபட்சம் ஆறு வித்தியாசங்கள் உள்ளன. விடை: 75'ம் பக்கம்.

''பாட்டிக்கு என்ன வேணு மாம்?''

''ஹரஹரன்னு சொல்லிக் கிட்டே தின்ன கர கரன்னு முறுக்கு!''

—சீர்காழி சாமா



''ஆம்; அந்த உத்தேசம் இருந்தது.''

''உங்கள் உத்தேசம் நிறைவேறி யிருந்தால் என்ன ஆகியிருக்கும்?''

''என்ன ஆகியிருக்கும்?''

''என்னைக் கொன்ற பழி உங்களைச் சாரும்!''

''எனக்கு அதைப்பற்றிக் கவலை யில்லை.''

''தவிர என்னைக் கொன்ற தற்காக மன்னர் உங்களைக் கோபிப் பார்.''

''இங்கு நீர் என்னைக் கட்டிப் பிடித்த விவரத்தைக் கூறினால் மழவ ராயன் கோபம் ஆறிவிடும்.''

''ஆனால் கார்குழலியின் கோபத்தை ஆற்றமுடியாது.''

''ஏன்?''

''நான் அவள் குரு.''

வீரபாண்டியன் அடிகளாரை ஏற இறங்கப் பார்த்தான். கார்குழலியைத் தன்னிடமிருந்து காப்பாற்ற அடிகளார் முயன்றதன் காரணமும் அவனுக்கு ஓரளவு தெரிந்தது. ஆகவே, மெள்ள ஏதோ யோசித்துவிட்டு, ''அப்படியா?'' என்றான்.

''ஆமாம் மகாராஜா!'' என்றார் அடிகளார், சற்றுப் பெருமிதத்துடன். அத்துடன் சம்பாஷணை நின்றிருந்தால் பின்னால் கதையில் நிகழவிருந்த பல விபரீதங்கள் நிகழாமல் இருந்திருக்கும். ஆனால் அடிகளார் வீரபாண்டியனை அத்துடன் விடாமல் மேலும் துன்பப்படுத்த இச்சை கொண்டு – இலக்கியத்தைத் தொடர்ந்தார்: ''மகாராஜா! தங்களிடம் எனக்கு இலக்கியம் பேசுவதென்றால் மிகவும் பிரியமாயிருக்கிறது. ஏன் தெரியுமா?'' என்றார்.

''ஏன்?''

''தாங்கள் சற்றுமுன் இளவரசியிடம் இலக்கியம் பேசியதைக் கேட்டேன், 'கற்றாரைக் கற்றாரே காமுறுவர்,'' என்பது தமிழ்ப் பெருமாட்டியின் திருவாசகம்.''

அடிகளார் தன்னைப் பார்த்து நகைக்கிறாரா, நிஜமாகத்தான் பேசுகிறாராவென்பதை வீரபாண்டியன் புரிந்து கொள்ளாததால் அவன் பதிலேதும் பேசாமல் அவரையே பேசவிட்டான். அடிகளார் உற்சாகத்துடன் பேச முற்பட்டு, ''மகாராஜா! கற்றவர்களைக் கற்றவர்தான் ரசிப்பார்கள். இலக்கிய ரசிகரான உங்கள் கோபத்தை இலக்கியத்தின் மூலம் ஆற்ற முடியுமென்றுதான் குறளைப் பற்றிக் கூறினேன். என்னை நீங்கள் கொன்றிருந்தால் கார்குழலிக்கு உம்மீது அடங்காத வெறுப்பு உண்டாகும். இப்பொழுதும் அவளுக்கு அபாரமான பிரியமிருப்பதாகக் கூறமுடியாது. ஆனால் இப்பொழுதுள்ள கொஞ்ச வெறுப்பு என் கொலையால் மலைபோலப் பெருகி அவள் உள்ளத்தில் நிலைத்து நின்றுவிடும். பிறகு உங்கள் திருமணம் கனவுதான். மழவராயன் மணத் தொடர்பு ஏற்படாவிட்டால் பாண்டிய நாட்டின் கதியைப் பற்றி நான் ஏதுவும் தங்களுக்குச் சொல்லத் தேவையில்லை. ஒரு சின்னக் கொலையால் எத்தனை தொல்லைகள் பார்த்தீர்கள்ா?'' என்றார்.

அடிகளாருக்கு இலக்கிய அறிவோடு அரசியல் அறிவும் அபாரமாக இருப்பதைக் கண்ட வீரபாண்டியன் அவரை நோக்கி, ''உலகத்தைத் துறந்த உங்களுக்கு அரசியலைப் பற்றி என்ன கவலை?'' என்று வினவினான்.

''இவனுக்குக் கவலையில்லாத விஷயம் உலகத்தில் என்ன இருக்கிறது? அரசியல் கவலை இல்லாவிட்டால் மழவராயன் தங்களைத் தேட, என்னை

அனுப்பப் போவதில்லை. மன்னர் அனுப்பாவிட்டால் நானும் இங்கு வந்திருக்கப் போவதில்லை. இங்கு நடைபெற்ற காதல் களியாட்டத்தையும் கவனிக்கப் போவதில்லை,'' என்று சொல்லி அடிகளார் சற்று விஷமமாகப் புன்முறுவல் செய்தார்.

''என்ன! என்னைத் தேடும்படி கார்குழலியின் தந்தையா உங்களை இங்கு அனுப்பினார்?'' என்று ஆச்சரியத்துடன் வினவினான் வீரபாண்டியன்

''ஆம்,'' என்றார் அடிகளார்.

''எதற்காக? அதுவும் இத்தனை நேரத்துக்குப் பின்...''

''அவசர ராஜாங்க காரியம்.''

''என்ன அப்படித் தலைபோகிற காரியம்?''

பதிலுக்கு ஒரு பெரிய வெடியை எடுத்து வீசினார் அடிகளார். ''பாண்டிய நாட்டிலிருந்து தூதன் வந்திருக்கிறான்,'' என்றார்.

''தூதனா?''.

''ஆமாம்!''

''ஓலை கொண்டு வந்திருக்கிறானா?''

''இல்லை. தங்களிடம் நேரில் பேசவேண்டுமாம்.''

''தூதனை அனுப்பியிருப்பது யார்?''

''இலங்காபுரன்!''

அடிகளாரின் வார்த்தையைக் கேட்டு ஒரு கணம் ஸ்தம்பித்த வீரபாண்டியன், ''இதை ஏன் முன்னமேயே என்னிடம் சொல்லவில்லை?'' என்று கேட்டான்.

''தாங்கள் சந்தர்ப்பமளிக்கவில்லை,'' என்று தாழ்மையுடன் விண்ணப்பம் செய்து கொண்டாலும், அடிகளாரின் இதழ்களில் இகழ்ச்சியாகப் புன்முறுவலும் தோன்றியது.

''நாம் மீண்டும் பேசுவோம்,'' என்று கூறிவிட்டு அரண்மனையை நோக்கி நடக்க ஆரம்பித்தான் வீரபாண்டியன். அவன் நாலடி தூரம் சென்றதும் அவனை அழைத்து நிறுத்திய அடிகளார், ''பாண்டிய மன்னனே! நான் ஒரு விஷயம் சொல்லுகிறேன்—கேட்பீரா?'' என்று வினவினார்.

''சொல்லும்,'' என்றான் வீரபாண்டியன்.

''கார்குழலியை மறந்துவிடுங்கள்.''

''ஏன்?''

''பெண்களின் குணம் அப்படி!''

''என்ன குணம்?''

''ஒருவனைக் காதலித்துவிட்டால் அவனைப் பற்றிப் பெரிதாக நினைக்கிறார்கள். அடுத்தபடி வருபவன்

## குடும்பம் ஒரு திவசு

சுந்தர்ங்கறவன் பக்கத்து வீட்டுப் பெண்ணை லவ் பண்ணான். கல்யாணம் பண்ணிக்க ஆசைப்பட்டு அப்பாகிட்ட கேட்டான். அப்பா சொன்னாரு, ''நீ அவளை மறந்துடு. ஏன்னா அவ எனக்குப் பொறந்தவ,''ன்னு. அப்பா இப்படிச் சொல்லிட்டாரேன்னு ரொம்ப வாட்டமா உக்கார்ந்திருந்தான் சுந்தரம். அம்மா வந்து 'ஏண்டா?'னு கேட்டாள். இவன் விஷயத்தைச் சொன்னான். அதுக்கு அம்மா சொன்னா, 'நீ அவளைக் கட்டிக்கலாம், தப்பில்லை'ன்னு. 'எப்படி?'னு இவன் கேட்டான். அம்மா சொன்னா, ''நீ உங்கப்பாவுக்குப் பொறந்தவனில்லே,'னு. சுந்தரம் ஒரு நிமிஷம் கொழம்பிப் போயிட்டான் யாருக்கு யார் பொறந்ததுனு தெரியாம. அது மாதிரி அ.தி.மு.க.வைப் பார்த்துக் கொழம்பிப் போயிருக்காங்க தமிழ்நாட்டு ஜனங்க.''

—குமாரபாளையத்தில் பேசிய ராதாரவி கூறக் கேட்டவர் ஏ.என்.எஸ்.



# தொழில் நுட்பமும் துல்லிதமும்

## முழுமையின் முத்திரை

BPL கலர் டிவியைக் காணும் போது, அதை உருவாக்குவதில் செலுத்தப்பட்டிருக்கும் கவனத்தை, உங்களால் உணர முடியும். அதன் தொல்லையற்ற செயல்திறனும், துல்லியமான படங்களும் இதற்குச் சான்று.

இதற்குக் காரணம் கலர் டிவி தொழில் நுட்பத்தை BPL முற்றிலும் புரிந்து கொண்டிருப்பதே. மேலும் BPL லின் தொழிற்சாலை அதிநவீன சாதனங்கள் கொண்டது. BPL கலர் டிவிகளின் முக்கிய பாகங்கள் ஜப்பானின் ஸான்யோ கம்பெனியோடு இணைந்து உருவாக்கப் பட்டவை.

இவற்றோடு, நூதனமான இரட்டை ஸோல்டரிங் முறையையும் இணைத்து உருவாக்கப்பட்டவை BPL கலர் டிவிகள். துல்லியமான படங்களோடு, வருடக் கணக்கில் தொல்லையற்ற செயல்திறனையும் வழங்குப்வை. அறிவியல் வளர்ச்சியின் விளைவான அதிநவீன தொழில் நுட்பத்தைக் கடைப்பிடிக்க வேண்டும் என்ற ஆர்வம்தான், BPL லைப் பிறருக்கு எடுத்துக்காட்டாக விளங்கச் செய்கிறது. இன்றே உங்கள் அருகிலுள்ள BPL டீலரை அணுகுங்கள். நெஞ்சை அள்ளும் வடிவங்களில் பல்வேறு மாடல்களில் வரும் முழுமையின் முத்திரையை உங்களுடையதாக்குங்கள்.

## BPL லில் அதை நீங்கள் காண்பீர்கள்

R K SWAMY/BPL/3583 TAM

அரசனாயிருந்தாலும் அசட்டை செய்கிறார்கள்.''

வீரபாண்டியன் கண்களில் வெறி நிறைந்த ஓர் ஒளி பிறந்தது. ''அடிகளாரே? மதுரைத் தமிழ்ச் சங்கத்துத் தலைவராக உமக்கு இஷ்டமா?'' என்று வினவினான்.

''பெரும் பாக்கியமல்லவா அது?'' என்றார் அடிகளார்.

''சரி, அதற்கு உம்மைத் தலைவராக்கி விடுகிறேன்.''

''அப்படித் தலைவனாக நான் என்ன செய்யவேண்டும்.''

''ஒரு ரகசியத்தை மட்டும் சொல்ல வேண்டும்.''

''என்ன! ரகசியமா?''

வீரபாண்டியன் அடிகளாருக்கு வெகு அருகில் வந்து, ''அடிகளாரே! கார்குழலி யாரைக் காதலிக்கிறாள்?'' என்று மிகக் குழைந்த குரலில் வினவினான்.

வீரபாண்டியனுக்குத் தன்னிடம் திடீரென அன்பு ஏற்பட்டதன் காரணத்தை அறிந்துகொண்ட அடிகளார் பின்னால் நகர்ந்து கொண்டே, ''தெரிந்தால் தங்களிடம் இத்தனை நேரம் மறைத்தா வைப்பேன்?'' என்றார்.

''அடிகளாரே! வீரபாண்டியனிடம் விளையாட வேண்டாம். விஷயத்தைச் சொல்லிவிட்டு நகரும்,'' என்றான் மன்னன்.

அடிகளார் ''தெரியாததைப் பற்றிக் கேட்டால் எப்படிச் சொல்லுவேன், மகாராஜா! தூதன் தங்களுக்காகக் காத்திருக்கிறான். கார்குழலியும் எனக்காகக் காத்திருப்பாள்!'' என்று சொல்லிக் கொண்டே வேகமாக அந்தப்புரத்தை நோக்கி நடக்கலானார் அடிகளார்.

அவரைத் தொடர எண்ணி ஓர் அடி எடுத்துவைத்த வீரபாண்டியன் சற்று நிதானித்துத் தனக்குள் ஏதோ யோசித்த பிறகு விடுவிடு என்று மாளிகையை நோக்கி நடந்தான். மாளிகையை அடைந்ததும் மாடிப்படிகளில் ஏறித் தன் அறைக்குச் செல்ல முயன்றவன் வழியிலிருந்த மழவராயன் அறையின் சாளரங்கள் திறக்கப் பட்டிருப்பதைக் கண்டு உள்ளே நோக்கினான். உள்ளே இருந்த காட்சியைக் கண்டதும் அவன் உள்ளத்தே ஓரளவு அச்சம் உண்டானாலும் என்னதான் நடக்கிறது என்பதை அறிய விரும்பி, சாளரத்தின் மூலமாக உள்ளே பார்த்துக் கொண்டே நின்றான். உள்ளே மழவராயன் எதிரே கண்களில் கோபம் பொங்கக் கார்குழலி நின்று கொண்டிருந்தாள். அவளுக்கும் அவள் தகப்பனுக்கும் நடந்த சம்பாஷணையில் தன்னைப் பற்றித் தகவல் வந்தபோதெல்லாம் பேருவகையடைந்த பாண்டிய மன்னன், மழவராயன் கடைசியாக மகளிடம் உரைத்த ஒரு செய்தியைக் கேட்டதும் விவரிக்க இயலாத பெரும் திகைப்படைந்து கனவேகமாகத் தன் அறைக்குச் சென்றான். அங்கு தனக்காகக் காத்திருந்த தூதனைக் கண்டதும் சற்றுமுன் கேட்ட செய்தியால் ஏற்பட்ட திகைப்பு மாறாமலும், அதனால் உண்டான கோபத்தால் நிதானத்தைப் பெரிதும் இழந்தும், ''இது உண்மைதானா?'' என்று இரைந்தான்.

அவன் அபிப்பிராயத்தை உணர்ந்த தூதனும், ''ஆமாம் பிரபு!'' என்றான் மிகப் பணிவுடன்.

''அவன் வந்து எத்தனை நாளாகிறது?'' என்று சீறினான் வீரபாண்டியன்.

''மூன்று நாட்கள்!'' என்றான் தூதன்.

''மூன்று நாட்களா!'' என்ற வீரபாண்டியன் மிதமிஞ்சிய திகிலால் பின்னாலிருந்த ஆசனத்தில் தொப்பென்று விழுந்தான்.

(தொடரும்)

ஆறு வித்தியாசங்கள் விடை:

1. பின்னல்
2. முழிக்கிறானே
3. மேஜை விளக்கு
4. புத்தகம்
5. கிராப்
6. வெளிச்சம்.





மாஜிஸ்திரேட்: இரண்டு பெண்ணுங்க பின்னாடியே பாட்டுப் பாடிக்கிட்டுப் போனீங்களா?

வாலிபன்: அவர்கள் திரும்பிப் பார்த்ததும் பாட்டெல்லாம் வேஸ்ட்டுன்னு தெரிஞ்சு ஓடிட்டோம் சார்!

# ஹெர் ஹாஹா

''நீங்கள் நடித்த படத்தில், உங்களுக்கு மிகவும் பிடித்த வசனம் எது?'' என்று நகைச்சுவை நடிகர்களைக் கேட்டபோது—

குமரி முத்து:

'இது நம்ம ஆளு' படத்தில் நாவிதர் கேரக்டர் எனக்கு. சலூன் கடையில் ஒரு நாள் ஷேவ் பண்ணிக் கொள்ள ஒருவர் வருவார். அவருக்கு நான் சோப்புப் பூசி விட்டு, கத்தியைக் கையில் இரண்டு தீட்டு தீட்டிக் கொண்டே முகத்தருகே கொண்டு போவேன். அப்போது அவர், ''யோவ், வேற எங்கேயோ பராக்குப் பார்த்துகிட்டு முகத்துல கத்தியை வைக்காதே. ஒழுங்கா முகத்தைப் பார்த்துப் பண்ணு'' என்பார்.



உடனே நான் ''முகத்தைப் பார்த்துத் தான் செய்யறேன். என் கண் பார்வையே இப்படிய்யா,'' என்பேன்.

இந்தக் காட்சி படமாக்கப்படும்போதே எல்லோரும் சிரித்து விட்டார்கள்.

பானா தானாவே வறலே

சார்லி:

'அண்ணே அண்ணே' படத்தில் வி.கே.ஆர். தலைமை சமையல்காரனாக நடித்தார். நான் உதவி சமையல்காரன். அவர் பெண்ணை நான் காதலிப்பேன்.

''பானா தானாவே உன் வாயில சரியா வரல., இந்த லட்சணத்துல என் பொண்ணைக் காதலிக்கிறியா?... படுவா!'' என்று வி.கே.ஆர். கோபமாகக் கேட்டதும்—



''ஃப்ழில் வேறு; சொந்ஃப வாழ்க்கை வேறு. ஃபானுவ் நினைக்கறப்ப என் மனசு ஃபக்கு ஃபக்குங்குஃது. ஃபானுவை நான் மனஃபார காஃபலிக்கறேன்,'' என்று நான் சொல்லும் கட்டம் எனக்கே சிரிப்பு வந்துவிட்டது.

'உந்கம்மா - எந்கம்மா!

பாண்டியராஜன்:

'ஆண்பாவம்' படத்தில் எனக்கு அப்பாவாக நடித்த வி.கே.ராமசாமியிடம், ''எங்கம்மாவை நீ கல்யாணம் பண்ணிக் கிட்டேல்ல? அப்ப, உங்கம்மாவை நான் கல்யாணம் பண்ணிக்கறேன்'' என்று நான் சொல்லும் வசனம் எனக்கு மறக்காத ஒன்று.

எஸ்.எஸ். சந்திரன்:



'சிவப்பு மல்லி' படத்தில் போலித் தியாகியாக நடித்தேன் நான். சுதந்திர தின விழாவில், ''வெள்ளைக்காரனை எதிர்த்துக் கப்பலோட்டித் தூக்கிலிடப் பட்டாரே ம.பொ.சி...'' என்பேன். மேடையில் அமர்ந்திருக்கும் ஒருவர், 'ம.பொ.சி. இல்லீங்க; வ.உ.சி.' என்பார்.

உடனே நான் ''ஏதோ ஒரு ஊசி. ஓட்டினாரா இல்லையா? அதுல ஒரு ஊ'சி' வருதா இல்லையா?'' என்று பதில் சொல்வேன். எல்லாரையுமே சிரிக்க வைத்த வசனம் இது.

கப்பலோட்டிய ம.பொ.சி

பேட்டி: டி. ஆர்.

# கன்னி மாடம்

20-10-'84

## 19. தந்தையும் மகளும்

வீரபாண்டியனிடமிருந்து தன்னை விடுவித்துக் கொண்டு புல்தரையில் புள்ளிமான் போல் துள்ளியோடிய கார்குழலி அந்தப்புர வாயிலை அடைந்ததும் சற்று நேரம் நின்று ஏதோ சிந்தித்துவிட்டு, உள்ளே நுழையாமல் பக்கவாட்டில் திரும்பி மழவராயன் மாளிகையை நோக்கி வேகமாக நடந்தாள். மழவராயன் மாளிகையும் அந்தப்புரத்தை ஒட்டியேதான் கட்டப்பட்டிருந்தது. அக்கம்பக்கத்திலிருந்த மாளிகையும் அந்தப்புரமும் விலகி நிற்பது போல் பார்வைக்குத் தெரிந்தாலும் பெருங்கொடிகளால் மறைக்கப்பட்ட மாடிகளின் குறுக்குத் தாழ்வாரமொன்று இரண்டு கட்டிடங்களையும் இணைத்துப் பாலமிட்டிருந்தது. அந்தப் பாலத்தின் இரு கோடிகளிலும் இரு மாடிப்படி வரிசைகள் நந்தவனத்துக்குள் இறங்கியிருந்தன. இரண்டு கட்டிடங்களிலுள்ளவர்களும் மாடிப்படிகளில் பரஸ்பரம் சம்பாஷிக்கும்படியாக அத்தனை அருகில் கட்டிடங்கள் இருந்தாலும், மழவராயன் சில ஆண்டுகளாகத் தன் படுக்குமிடத்தை மாளிகையின் ஒரு கோடியிலிருந்து மற்றொரு கோடியில், அந்தப்புரத்துக்கு அருகாமையிலிருந்த அறைக்கு மாற்றிக்கொண்டிருந்தான். மனைவி காலமான பிறகு மகள் தன்



சாண்டில்யன்

பார்வையிலேயே இருக்கவேண்டுமென்று மழவராயன் செய்துகொண்ட ஏற்பாடு அது.

படிகளில் ஏறிச்சென்று மாளிகையில் திரும்பியதும் முதன்முதலாகத் தென்படக்கூடியது மழவராயன் பள்ளியறைதான். பாண்டிய நாட்டுச் சிறப்புத் திறமைக்குச் சான்றாக விளங்கிய பெரும் தூண்களின்மீது எழுந்து நின்ற அந்த அறையின் அடித்தளத்தில்கூட ஆயிர மாயிரம் சின்னஞ்சிறு வண்ணச் சித்திரங்கள் வரையப்பட்டிருந்தன. நாலு பக்கத்துச் சுவர்களிலும் கண்ணகியும் மணிமேகலையும் வாழ்ந்ததால் விளைந்த தமிழ்க் காவியங்கள், ஓவியங்களாக அமைந்திருந்தன. தோட்டத்தையும் அந்தப்புரத்தையும் நோக்கி இரு பக்கங்களில் அமைக்கப்பட்டிருந்த பெரிய சாளரங்களை வெயிலடிக்கும்போது மறைப்பதற்காகக் கட்டப்பட்டிருந்த கருள் தட்டிகளில்கூடத் தமிழர்களின் கலைத்திறமை நன்றாகக் காட்டப்பட்டிருந்தது. நீர்த்துளிகள் பட்டதும் இன்பமணம் கமழும் இயற்கை வாய்ந்த அந்த வெட்டிவேர் தட்டிகளில்கூட ஓரிரண்டு சுருட்டாமல் அவிழ்ந்து கிடந்ததால் மழவராயன் அறை முழுவதும் கம்மென்று வாசனை அடித்துக்கொண்டிருந்தது. அந்தத் தட்டிகளில்தான் எத்தனை எத்தனை சித்திர ஜாலங்கள்! அதோ ஒன்றில் கண்ணன் குழலூதும் எழிலுருவம்! இன்னொன்றில் ராதை நடனமாடும் இன்பத் தோற்றம்! அந்த ராதையின் புடவையில் வானவில் காட்டும் அத்தனை வர்ணங்களுமா இருக்கும். அவள் கன்னங்களிலென்ன கமலத்தின் சாயையா! உதடுகள் என்ன அத்தனை சிவப்பு! இப்படிப் பிரமிக்கும்படியாகத் தீட்டப்பட்டிருந்த உருவங்களுக்கு ஒளி வீசி இன்னும் அதிக உயிரிருக்கும்படியாகச் செய்துகொண்டிருந்தது அறை மூலையில் நிறுத்தப்பட்டிருந்த ஒரு விளக்கு. அறை மூலையிலிருந்தவை மொத்தம் இரு பெரிய வெண்கலப் பெண்ணுருவங்கள். அசப்பில் பார்த்தால் கையில் பிட்சைப் பாத்திரங்களை ஏந்தி நிற்கும் எழில் பொழியும் ஏந்திழைகளைப் போன்ற தோற்றமளித்த அந்த இரண்டு விளக்குகளில் கார்குழலி உள்ளே நுழைந்தபோது ஒன்றுதான் எரிந்து கொண்டிருந்தது.

அந்த விளக்குக்கு முதுகைக் காட்டிக்கொண்டு அறை நடுவேயிருந்த மஞ்சத்தில் ஆழ்ந்த யோசனையுடன் உட்



கார்ந்து கொண்டிருந்தான் மழவராயன். எத்தனை எத்தனை கவலைகளால் பீடிக்கப்பட்டிருந்த அவன் மனத்துக்குள் அறையைச் சுற்றிலுமிருந்த கலைக்காட்சிகளோ காற்றில்லாமல் அசையாது எரிந்த விளக்கின் சுடரொளியோ எந்தவித ஆறுதலையும் அளிக்கவில்லை. அவன் மனத்தைக் கவரவேண்டுமென்பதற்காகத் திறந்திருந்த ஜன்னல் வழியாக அறைக்குள்ளே பட்டையாக விழுந்திருந்த சந்திர வெளிச்சம்கூடத் தன் உத்தேசத்தில் பெருந் தோல்வியே அடைந்தது. மழவராயன் மனம் பூராவும் தமிழ்நாட்டின் பிற்கால ஸ்திதியிலும் தனது மகளின் திருமண நிச்சய ஏற்பாடுகளிலுமே முற்றும் லயித்துக் கிடந்தது. ஆகவே கார்குழலி வேகமாக உள்ளே வந்ததையோ அவள் தனக்கு எதிரே நின்றதையோ மழவராயன் கவனிக்கவேயில்லை. அவள் குரல் கொடுத்த பிறகுதான் இந்த உலகத்துக்கு வந்தான். வேகமாகப் பாய்ந்து வரும் காவிரி நீர் கரையால் தடுக்கப்பட்டதும், எப்படி ஒருமுறை அலைமோதித் திரும்புமோ அந்த மாதிரியே கடுவேகத்துடன் வந்த கார்குழலியும் மழவராயன் மௌனத்தால் ஒரு நிமிஷம் தேக்கி நிறுத்தப்பட்டிருந்தாலும் உள்ளேயிருந்த ஆக்ரோஷத்தால் திரும்பி நோக்கி, ''அப்பா!'' என்று அழைத்தாள்.

குரலில் ததும்பிய உஷ்ணத்தால் கணீரெனத் தெறித்த அந்த அழைப்புக்கூட மழவராயனை உலுக்கிவிடவில்லை. எதற்கும் அசைந்து கொடுக்கும் சுபாவமில்லாத மழவராயன் மிக மெதுவாகவே தலையை உயர்த்தி, ''குழலியா?'' என்றான் ஆச்சரியத்துடன்.

துடிப்பிலிருந்த கார்குழலிக்கு அவன் சாந்தம் அதிகக் கோபத்தை அளித்தது. ''குழலிதான். ஏன், தெரியவில்லையா?'' என்றாள்.



(ஒலிம்பிக்ஸ் விழாவில்)

''அந்த இந்திய விளையாட்டு வீரர், என்ன வேணும்னு அடம் பிடிக்கிறார்?''

''ஒலிம்பிக் மெடலே பார்த்ததில்லையாம். ஒண்ணு காமிக்கச் சொல்றார்.''

—தேரமுந்தூர் மணி

மழவராயன் கண்கள் அவள் முகத்தை ஒரு வினாடி ஆராய்ந்தன. பிறகு உதடுகள் மெல்லவே உச்சரித்தன: ''தெரிகிறது'' என்று.

''எதற்காக வந்தேனென்று ஏன் கேட்கவில்லை?'' என்று கார்குழலி வினவினாள்.

''இவ்வளவு அவசரமாக வந்திருப்பவள் சொல்லாமலா போய்விடப் போகிறாள்?'' என்ற மழவராயன் பேச்சோடு அவன் இதழ்களில் புன்முறுவலும் படர்ந்தது.

''சொல்லாமல் போகப் போவதில்லை, சொல்லி நியாயம் கேட்கவே நான் வந்திருக்கிறேன்,'' என்றாள்.

'சொல்' என்பதற்கு அடையாளமாகப் பார்வையொன்றை அவள்மீது வீசினான் மழவராயன். அவன் மௌனத்தாலும் பார்வையாலும் உதறி எழுந்த உணர்ச்சிகளுடன், ''அந்தப்புர நந்தவனத்தை எத்தனை நாட்களாக அன்னியர்களுக்குத் திறந்து விட்டிருக்கிறீர்கள்?'' என்று வினவினாள் அவள்.

மழவராயன் உணர்ச்சியற்ற முகத்திலும் சற்று உணர்ச்சி தோன்றி மறைந்தது. ''அப்படி எந்தவித உத்தரவும் போட்டிருப்பதாக எனக்கு நினைவில்லை,'' என்றான்.

''பழைய உத்தரவை மாற்றாவிட்டால் அந்தப்புர நந்தவனத்துக்குள் நுழையும் ஆடவருக்கு என்ன தண்டனை அளிக்க வேண்டும்?''

''சந்தேகமென்ன, மரண தண்டனைதான்.''

''அப்படியானால் மரண தண்டனைக்கு ஓர் உத்தரவு எழுதுங்கள்.''

''யாருக்குத் தண்டனை விதிக்க வேண்டும் என்று சொல்லவில்லையே?''

''வீரபாண்டியனுக்குத்தான்.''

இந்தப் பதிலால் மழவராயன் ஏதாவது அசந்துபோய் விடுவானென்றோ, பிரமித்து அலறிப் புடைத்துக்கொண்டு எழுந்து நின்றுவிடுவானென்றோ கார்குழலி நினைத்திருந்தால் அவள் ஏமாந்தே போனாள். கேள்விக்கும் ஆச்சரியத்துக்கும் அறிகுறியாக மழவராயன் புருவங்கள் ஒரு முறை ஏறி இறங்கின. அவ்வளவுதான். சாந்தம் நிரம்பிய குரலிலேயே மழவராயன் மீண்டும் மகளை வினவினான்: ''யார், மதுரை மன்னனா?''

''மதுரை மன்னனல்ல,'' என்றாள் பதிலுக்குக் கார்குழலி.

''வேறு வீரபாண்டியன் ஏது?''

''இலங்காபுரனுக்கு அடிமையாக ஒரு வீரபாண்டியன் இருக்கிறான்.''

மழவராயன் இதழ்களில் புன்முறுவல் லேசாகப் படர்ந்தது. ''அவனை அடிமைத் தளையிலிருந்து மீட்கவும், மதுரையின் உண்மையான மன்னனாக அவனை ஆக்கவுமே, இப்பொழுது முயற்சி செய்கிறேன் குழலி,'' என்றான் மழவராயன்.

''முயற்சியா! எப்படி முயற்சி செய்கிறீர்கள்?''

''உன்னை அவனுக்கு எதற்காகத் திருமணம் செய்து கொடுக்கிறேனென்று நினைக்கிறாய்?''

''அவனைக் காப்பாற்றவா?''

''அவனைக் காப்பாற்ற அல்ல. நாம் பிறந்த இந்த நாட்டைக் காப்பாற்ற. தமிழ் மக்களைக் காப்பாற்ற.''

இந்தப் பதிலைக் கேட்ட கார்குழலியின் கோபம் சற்று உச்ச நிலையை அடைந்தது. ''உங்களால் காப்பாற்ற முடியாது,'' என்றாள்.

''ஏன்?'' என்று வினவினான் மழவராயன்.

''இந்த வீரபாண்டியனை நான் திருமணம் செய்து கொள்ள முடியாது.''

''ஏன், அவனுக்கென்ன குறைச்சல்?''

''குறைச்சல் எதுவுமில்லை, எனக்கு இஷ்டமில்லை.''

''உன் இஷ்டத்தை யார் கேட்டது?''

இந்தக் கேள்வியால் கோபம்

உச்சநிலையை அடையவே கார்குழலி ஜொலிக்கும் கண்களுடன் தகப்பனைப் பார்த்தாள். மழவராயன் பார்வையில் மட்டும் கோபமோ, பதற்றமோ இல்லை. ஏதோ சாதாரண விஷயத்தைப் பற்றித் தர்க்கிப்பவன் போலவே, மகளின் திருமண விஷயத்தைப் பற்றியும் தர்க்கிக்கலானான் மழவராயன். ''என் இஷ்டத்தை யார் கேட்டதா? என் இஷ்டத்துக்கு விரோதமாக நான் வெறுக்கும் ஒருவன் காலிலா என்னைக் கட்டப் போகிறீர்கள்?'' என்று கார்குழலி மீண்டும் சீறிய போதுகூட மன்னன் சிறிதும் அசைந்து கொடுக்காமலே பதில் சொன்னான்: ''குழலி, நீ அரசகுமாரி. அரச வம்சத்தில் பிறந்தவர்கள் விருப்பு வெறுப்பு வைத்துக் கொள்வதால் விபரீதங்களே விளையும்?'' என்றான்.

''அரச குடும்பத்தில் பிறந்தவர்களுக்கு விருப்பு வெறுப்புக் கூடாதா? ஏன் அவர்கள் மனிதர்களில்லையா? மனித உணர்ச்சிகள் அவர்களுக்குக் கிடையாதா? மற்ற மனிதர்களுக்கும் அவர்களுக்கும் என்ன வித்தியாசம்? மற்றவர்களைப்போல அவர்கள் சாப்பிடுவதில்லையா, உறங்குவதில்லையா, பிறப்பதில்லையா, சாவதில்லையா?'' என்று வினவினாள் மழவராயனின் மகள்.

''நீ சொன்ன அத்தனையிலும் வித்தியாசமிருக்கிறது, கார்குழலி! மற்றவர்களைப்போல் அரசர்கள் சாப்பிடுவதில்லை! மற்றவர்கள் சாதாரண உண்டியுண்டால் அரசர்கள் சதா அறுசுவையுண்டியே உண்ணுகிறார்கள். மற்றவர்கள் சிறு வீடுகளில் வாழ்ந்தால் அரசர்கள் மாளிகையில் வாழ்கிறார்கள். மற்றவர்கள் பாயில் படுத்தால் மன்னர்கள் பஞ்சணையில் படுக்கிறார்கள். மற்றவர்கள் பாயில் படுத்தாலும் உறங்குகிறார்கள். மன்னர்கள் பஞ்சணையில் படுத்தாலும் உறங்குவதில்லை. மற்றவர்கள் பிறக்கும்போது தங்கள் குடும்பத்தை மட்டும் ரட்சிக்கும் கடனுடன் பிறக்கிறார்கள்; மன்னர்கள் பிறக்கும்போது ஆயிரக்கணக்கான குடும்பங்களைக் காப்பாற்றும் பொறுப்புடன் பிறக்கிறார்கள். மற்றவர்கள் சாகும்போது சாவுடன் அவர்கள் படலம் முடிந்துவிடுகிறது. மன்னர்கள் சாவு சரித்திரத்தில் எழுதப்படுகிறது. அவர்கள் ஆட்சியின் பாதகமும் சாதகமும் ஏடுகளில் தீட்டப்படுகின்றன. அவர்கள் மாண்ட ஆயிரக்கணக்கான வருஷங்

பார்! பார்! பட்டணம் பார்!

சென்னை மாநகராட்சியின் மணிக்கூண்டு, சுமார் பதினைந்து வருடங்களுக்கு முன்பு வரை வடசென்னைவாசிகளுக்குக் காலைச் சேவலாக இருந்தது. அதன் மணியோசையைக் கேட்டு, அதையே ஆதாரமாக வைத்து தத்தமது தொழிலகங்களுக்குச் சென்ற தொழிலாளர்கள் நிறையப் பேர். அதோடு, மாநகராட்சி அலுவலகம் சம்பந்தப்பட்ட வேலைகளை முடிப்பதற்காக அங்கே வருபவர்களுக்கு அந்த மணி ஓசை நல்ல சகுனமாக அமைவதுண்டு.

இந்த ஒலியைத் தருபவை ஐந்து பிரம்மாண்ட மணிகள். சுத்தியல் போன்ற அமைப்பு ஒவ்வொரு மணியையும் தாக்கி ஒலியைப் பிரசவிக்கின்றன.

மாநகராட்சி வழியாகப் போவோரும் வருவோரும் இந்த மணிக்கூண்டை அண்ணாந்து பார்த்த 'காலம்' எல்லாம் போய் விட்டது. எல்லோரும் இப்போது தங்கள் மணிக்கட்டைத்தான் பார்த்துக் கொள்கிறார்கள்.

படங்கள், தகவல்: ஸ்படிகா





மணி ஆன நகராட்சி

களுக்குப் பின்பும் அவர்களை மக்கள் போற்றவோ தூற்றவோ செய்வார்கள். இத்தனை வித்தியாசங்களிருக்கின்றன. பிறப்பு இறப்பு மட்டுமல்ல கார்குழலி, வாழ்க்கையிலும் பெருத்த வித்தியாசமிருக்கிறது. சாதாரணப் பிரஜைகள் இஷ்டப்படி திருமணம் செய்து கொள்ளலாம். மன்னர் மரபில் பிறந்தவர்கள் அப்படிச் செய்து கொள்ள முடியாது.''

''ஏன்?''

''சாதாரணப் பிரஜையின் திருமணம் அவனை மாத்திரம் பாதிக்கிறது. மன்னர் மரபினர் திருமணம் ஆயிரக்கணக்கான குடிமக்களைப் பாதிக்கிறது. ஆகவே மன்னர் மரபினர் சம்பந்தப்பட்டவரையில் மக்களுக்காகத்தான் மணமே தவிர, மனத்துக்காக மணம் என்பது கிடையாது. எந்த இடத்தில் திருமணம் செய்து கொண்டால் ஜனங்களுக்கு லாபமாயிருக்குமோ அந்த இடத்தில்தான் அரச வம்சத்துப் பெண்கள் மணம் செய்து கொள்ளவேண்டும்,'' என்று விளக்கிச் சிறிது நேரம் பேச்சை நிறுத்தினான் மழவராயன்.

''இந்தக் குடிகாரனின் காலில் என்னைக் கட்டத் தீர்மானித்து விட்டீர்களா? என்ன லாபத்தை உத்தேசித்து அப்படித் தீர்மானித்தீர்கள்?'' என்று வினவினாள் கார்குழலி.

''முன்பு சொன்னது போல் நாட்டின் லாபத்தை உத்தேசித்துத்தான். இந்தத் திருமணத்தால் பாண்டியநாடு பலப்படும். என் படைகளுடன் பாண்டியப் படைகள் சேர்ந்தால் இலங்காபுரன் சிங்களத்திலிருந்து அழைத்து வந்திருக்கும் படைகளின் பலம் பெரிதும் குறையும். அதனால் இலங்காபுரன் பிடியும் பாண்டிய நாட்டான் மீதிருந்து சிறிது தளரும். பிறகு அவனைத் திரும்ப ஊருக்கு அனுப்புவது ஒரு பிரமாதமான காரியமல்ல. இப்படி இலங்காபுரன் அனுப்பப்பட்டுவிட்டால் போருக்குத் தயார் செய்யும் சோழ மன்னன்கூடப் போரைக் கைவிட்டு விடுவான்.''

''ஏன், சோழ மன்னனுக்கு உங்களைக் கண்டால் பயமோ?'' என்றாள் கார்குழலி.

அவள் குரலில் தொனித்த ஏளனத்தை லட்சியம் செய்யாமலே, ''பயமல்ல குழலி! சிங்களத்து ஆதிக்கம் தமிழ்நாட்டில் வேரூன்றக் கூடாது என்பதற்காகத்தான் சோழ மன்னன் படையெடுக்க முற்படுகிறான். அந்த ஆபத்து தீர்ந்தால் படையெடுக்கமாட்டான்,'' என்று விளக்கினான் மழவராயன்.

''இதெற்கெல்லாம் ராஜீய ஒப்பந்தங்களைச் செய்து கொள்ளலாமே,'' என்றாள் கார்குழலி.

''செய்து கொள்ளலாம். ஆனால் ஏட்டிலெழுதும் ஒப்பந்தங்களைவிட ரத்தத்தில் எழுதப்படும் ஒப்பந்தங்கள் நீண்டகாலமிருக்கும். தவிர, வீரபாண்டியனுக்கும் உனக்கும் திருமணமாகி மகன் பிறந்தால் மழவமும் பாண்டிய நாடும் ஒன்றாக இணைந்து பலமான ஒரு வல்லரசு சிருஷ்டிக்கப்படும். பிறகு பாண்டிய நாட்டவர் சக்தியை எதிர்த்து நிற்கச் சோழனால்கூட முடியாது. உன் மகன் வீரனாயிருந்தால் சோழனையும் வெற்றிக்கொண்டு தமிழர்களின் பேரரசனாகக்கூட வாழலாம்,'' என்று பேசிக் கொண்டே போன மழவராயன் தான் பூவுலகில் இருக்கிறோமென்பதை மறந்து கனவுலகில் சஞ்சரிக்க ஆரம்பித்தான்.

தன் உணர்ச்சிகளை ஒரு பொருட்டாக மதிக்காமல் தன்னை ராஜ்யத்துக்காகக் கை மாற்றப்படும் பொருளைப் போல் தகப்பன் நினைப்பதைக் கண்ட கார்குழலி, கோபத்தால் தொண்டையடைக்கக் கம்மிய குரலில் தகப்பனாரை நோக்கிச் சீறினாள். ''அப்பா! நீங்கள் சொல்வதெல்லாம் உண்மையாயிருக்கலாம். ஆனால் எந்தக் காரணத்தைக் கொண்டும் நான் வீரபாண்டியனை மணக்க முடியாது. அவனை நான் மனதார வெறுக்கிறேன்,'' என்றாள்.

''காலம் வெறுப்பை விருப்பாக மாற்றிவிடும். கசப்பைக் காதலாக்கும்,'' என்றான் மழவராயன்.

''வீரபாண்டியனை மணப்பதைவிட வைகையில் விழுந்து பிராணனை விடுவேன்.''



''வைகை வெகுதூரம் இருக்கிறது. வைகையை நீ அடுத்த முறை பார்க்கும்போது வீரபாண்டியன் மனைவியாகவும், பாண்டிய ராணியாகவுமே பார்ப்பாய். சந்தேகமே வேண்டாம், கார்குழலி!'' என்று சாந்தத்தை உதறிக் கொண்டு சீறி விழுந்த மழவராயன் தன் மகளை நோக்கி மேலும் கூறினான்:

''மகளே, என் பொறுமையை அதிகமாகச் சோதிக்காதே. மன்னர் மகளாக நடந்து கொள். உணர்ச்சிகளை அடக்கிக் கடமையில் கவனத்தைச் செலுத்து. எத்தனை அபாயங்கள் நமது மக்களைச் சூழ்ந்திருக்கின்றன என்பது உனக்குத் தெரியாது. உன் ஒருத்தி பிடிவாதத்துக்காக நான் லட்சக்கணக்கான மக்களைப் பலி கொடுக்கத் தயாராயில்லை. இப்பொழுது பாண்டியனைக் காண இலங்காபுரன் ஒரு தூதனை அனுப்பியிருக்கிறான்,'' என்று பேசிக் கொண்டே போன மழவராயன் சற்று நின்று மகளை நோக்கி, ''ஏன் தெரியுமா?'' என்று வினவினான்.

''ஏன்?'' என்று பதிலுக்குக் கேட்டாள் கார்குழலி.

''சோழ நாட்டிலிருந்து அவசர தூதன் ஒருவன் வந்து மதுரையில் தங்கியிருக்கிறான். அவன் யார் தெரியுமா?'' என்று உதடுகளில் கோபங் கலந்த புன்முறுவல் தவழ மீண்டும் ஒரு கேள்வியை வீசினான் மழவராயன்.

''யார்?'' என வினவினாள் கார்குழலி.

மழவராயன் வார்த்தைகளை மிகுந்த மரியாதையுடனும் ஓரளவு பயத்துடனும் உச்சரித்தான்: ''அண்ணன் பல்லவராயன்.''

இரு சொற்களைக் கொண்ட அந்த வார்த்தை கார்குழலியைக்கூட அதிரச் செய்யவே சட்டென்று தலை நிமிர்ந்து தகப்பனை நோக்கி, ''யார் சின்னப் பல்லவராயரா?'' என்றாள்.

ஆமென்பதற்கு அறிகுறியாகத் தலையசைத்தான் மழவராயன். இந்தப் பதில் கார்குழலிக்கு மட்டுமல்ல, அதுவரை சாளரத்தருகில் மழவராயன் தன் பக்கம் வாதிப்பதை மகிழ்ச்சியுடன் கேட்டு நின்ற வீரபாண்டியனுக்கும் பேரதிர்ச்சியை விளைவிக்கவே, மிக வேகமாக நடந்து தன் அறைக்குச் சென்று அந்தச் செய்தியைத் தன் நாட்டுத் தூதன் மூலம் ஊர்ஜிதம் செய்து கொண்டான் அவன்.

சற்று நேரத்தில், தன் மெய்க்காவலர் படைத் தலைவனை வரவழைத்து, ''நாளைக்கே பாண்டியநாடு புறப்பட வேண்டும். சகலத்தையும் தயார் செய்,'' என உத்தரவிட்டான். பிறகு தன்னுடன் வந்திருந்த இரு அமைச்சர்களையும் கூப்பிட்டுத் திருமண நிச்சயத்தை எப்படி நடத்துவது என்று வினவினான்.

''பாண்டிய நாட்டு மன்னன் திருமண நிச்சயம் கோலாகலத்துடன் நடக்க வேண்டும். அதற்கு இப்பொழுது அவகாசமில்லை,'' என்றார் முதலமைச்சர்.

''திருமண நிச்சயத்திற்கு அவகாசமில்லாவிட்டாலும் திருமணம் நிச்சயமாகிவிட்டதாகப் பறையறைவிக்கச் செய்தால் போதும்,'' என்றார் மற்றவர்.

''அதனால் என்ன பிரயோசனம்?''

''பறையறைவித்தலே திருமண நிச்சயத்திற்கு ஓர் அத்தாட்சி. பிறகு மனத் தொடர்பிலிருந்து மழவராயன் விலக முடியாது. தவிர, இந்தத் திருமணத் தொடர்பு நிச்சயமாகிவிட்ட செய்தியுடன் மதுரை சென்றால் அண்ணன் பல்லவராயனையும் தைரியமாக எதிர்த்துப் பேசலாம்.''

இவர்கள் இப்படித் திருமணத்தை உறுதிப்படுத்தத் தீர்மானித்துக் கொண்டிருந்த அதே சமயத்தில் திருமணத்தை உடைக்கச் சிவானந்த அடிகளார் வேறோர் ஏற்பாட்டைச் செய்து கொண்டிருந்தார். அந்த ஏற்பாட்டை முன்னிட்டுச் சுமார் இருபத்தைந்து வயது மதிக்கக்கூடிய வாலிபனொருவனைக் கார்குழலியின் அந்தப்புரத்துக்கு வெகு ரகசியமாக அழைத்துச் சென்று கொண்டிருந்தார்.

(தொடரும்)

''கனவுகளுக்குப் பலன்'ன்னு நான் எழுதிய புத்தகம் ஒரு மணி நேரத்துல ஆயிரம் பிரதி வித்துப் போச்சு!''

''நிஜமாவா...?''

''ஆனால் அதுவும் கனவுல தான்...!''

—பொன். கிருஷ்ணமூர்த்தி





டிஸ்கோ சாந்திக்கும் ஒரு காமெரா மேனுக்கும் காதல் மலர்ந்துள்ளது. காமெராமேன் டிஸ்கோ சாந்தி வீட்டிற்கு வருகிறார். போகிறார். அப்பா அம்மா இதைக் கண்டுகொள்வதே கிடையாது. காரணம் டிஸ்கோ சாந்தியின் வருமானத்தில்தான் குடும்பம் நடக்கிறதாம்.

இரண்டாவது ஞாயிற்றுக்கிழமை ஊரில் இருந்தால் காரில் டிஸ்கோ சாந்தியும் அவர் தங்கை லலிதகுமாரியும் கருமாரியம்மன் கோவிலுக்குத் தவறாமல் போய் வந்து விடுவார்கள்.

டிஸ்கோ சாந்தியும் ஏவி.எம். ராஜன் மகள் மகாலட்சுமியும், நெருங்கிய தோழிகளாக இருந்தார்கள். சமீபகாலமாக இவர்களுக்குள் என்ன தகராறோ, அவர்கள் வீட்டிலிருந்து யாரும் இங்கே வருவதில்லை.

# காமெராக் காதல்

தகவல்: சங்கர்



# கன்னிமாடம்

சாண்டில்யன் சாண்டில்யன் சாண்

27.10.88

## 20. சித்திரமும் சிவனடியாரும்

பாண்டிய மன்னனுக்குத் திருக்குறள் ஓதிவிட்டு, பரபரப்புடன் நந்தவனத்திலிருந்து அந்தப்புரத்தை நோக்கி நடந்த அடிகளார், அந்தப் புரத்தின் கீழ்ப்பாகத்திலிருந்த தனது அறைக்கருகே வந்ததும் உள்ளே நுழைய மனமில்லாமல் தாழ்வாரத்திலேயே நின்று ஏதோ சிந்திக்கலானார். சூழ்நிலையும் சிந்தனைக்கு மிக அனுகூலமாயிருந்தது. எங்கும் நிசப்தம் நிலவிக் கிடந்தது.

நந்தவனத்துப் பக்கமாக அடிகளாரின் அறை அமைந்திருந்ததால் அங்கு காவல் வீரர்கள்கூட யாருமில்லை. கட்டிடத்தின் வெளிப்பக்கத்தில் காவல் புரிந்த வீரர்களின் நடமாட்டம்கூட இடையே தடுத்து நின்ற பெரும் சுவர்களின் காரணமாகக் காதில் விழவில்லை. நேரம் அதிகமாகி விட்டதால் கார்குழலியைத் தோட்டத்திலிருந்து எதிர் பார்த்துக் கொண்டிருந்த ஓரிரு பாங்கியரைத் தவிர மற்றப் பணிப்பெண்களெல்லாரும் உறக்கத்தின் அணைப்பில் பரவசப்பட்டுக் கிடந்ததால் மாடிப் பக்கமிருந்தும் கால்களின் நடமாட்டச் சத்தமோ, மெட்டிகளின் கிண்கிணி என்ற ஓசையோ, சிலம்புகளின் சலசலப்புச் சத்தமோ எதுவுமே கேட்காமல் அமைதி பரிபூரணமாக இருந்தது. கூண்டுகளில் உறங்காத ஏதோ ஓரிரு பறவைகளின் கிலா கிலா சப்தம் ஒவ்வொரு முறை கேட்டது.

நந்தவனத்தில் ஏதோ ஒரு பாகத்திலிருந்த மயிலொன்று ஒரு முறை தனது அபஸ்வரக் குரலைக் காட்டி அகவியது. இந்தச் சில்லறைச் சப்தங்களைத் தவிர எந்தவிதமான இடைஞ்சலுமில்லாத சூழ்நிலையில் சிந்தனையில் ஆழ்ந்துவிட்ட அடிகளார் அன்று நடந்த சம்பவங்களையும் அவற்றால் ஏற்படக் கூடிய விளைவுகளையும் பற்றி ஆராயத் தொடங்கினார்.

அன்று வரை வீரபாண்டியனை அடிகளார் பார்த்ததே இல்லை. பார்க்காததற்கு முன்பே அவருக்கு அவனிடம் மிகுந்த அருவருப்பு இருந்து வந்தது. பார்த்த பின்பு, அந்த அருவருப்பு ஆயிரம் மடங்கு அதிகமாகியதோடு, இப்பேர்ப்பட்டவனுக்கா கார்குழலியை மணம் முடித்துக் கொடுக்க மழவராயன் நினைத்திருக்கிறான் என்பதை எண்ணி எல்லையற்ற வியப்பில் மூழ்கினார். இலங்காபுரனின் தயவில் காலங்கழிக்கும் மன்னனும் ஒரு மன்னனா என்று அவனைச் வெறுத்து வந்த அடிகளார், அவனைத் தோட்டத்தில் நேரில் சந்தித்ததோடு அவன் கார்குழலியிடம் நடந்துகொண்ட மாதிரியையும் கவனித்த பின்பு, இப்பேர்ப் பட்ட ஒரு மூர்க்கனிடம் தன் வளர்ப்புக் குழந்தையை ஒப்படைக்கக் கூடாது என்ற முடிவுக்கு வந்தார்.

இதை எப்படியும் நிறுத்தியாக வேண்டும் என்று தீர்மானித்து அதற்கான மார்க்கம் என்ன என்பதைப்பற்றி யோசனையிலும் ஆழ்ந்தார். தாழ்வாரத்தில் இந்த மாதிரி சிந்தனையில் ஆழ்ந்த அந்த நேரத்திலும் வீரபாண்டியனின் உருவம் அவர் புத்தியில் எழுந்து நின்றது. குடியால் நிதானமிழந்த அவன் நடை, வெறியும் குழப்பமும் நிறைந்த அவன் கண்கள், ஊதிய அவன் சரீரம், விஷமும் அறிவீனமும் கலந்த அயோக்கியச் சிரிப்பு அத்தனையும் அவர் கண் முன்பாக எழுந்து தாண்டவமாடின. இத்தனை அழகில் அவன் இலக்கியம் பேசிய லட்சணத்தை நினைத்ததும் அடிகளார் உள்ளத்தில் எரிச்சலோடு உதட்டில் சற்றுப் புன்முறுவலும் தவழ்ந்தது. நாட்டை ஆள்வதில் அசட்டையும், காம வேட்டையாடுவதில் கருத்தும் கொண்ட அந்தக் கசடனுக்குக் கண்ணின் கருமணி போன்ற கார்குழலியைக் கட்டிக் கொடுக்க மழவராயன் ஏன் ஒப்புக் கொண்டான் என்பதும்

அடிகளாருக்கு நன்றாகத் தெரிந்தேயிருந்தது. நாட்டின் நன்மையை உத்தேசித்துக் குலசேகர பாண்டியனின் மகன் விக்கிரம பாண்டியனுக்கோ அல்லது மதுரையை ஆண்டுவரும் வீரபாண்டியனுக்கோ மகளைப் பலியிடுவதென மழவராயன் முன்பே தீர்மானித்து விட்டானென்பதை அடிகளார் அறிவார்.

இந்த இரண்டு பேர்களில் யாருக்குக் கார்குழலி கிடைப்பாள் என்பதில்தான் சந்தேகமிருந்தது. சோழ மன்னனின் படை பலத்தைக் கொண்டு மதுரையைக் கைப்பற்றிப் பின்னால் அரசாளக் கூடிய குலசேகர பாண்டியன் மகனுக்கா அன்றி இப்பொழுது அரசாளும் வீரபாண்டியனுக்கா என்பதிலிருந்த சந்தேகத்தைக் கருணாகரத்தேவன் வந்து உடைத்துவிட்ட பின்பே இந்தத் திருமணம் நிச்சயமாயிற்று. இந்தத் திருமணத்தால் இலங்காபுரனை அடக்கி எப்படிச் சோழ நாட்டுப் படையெடுப்பைத் தடுத்து மக்களைக் கோரமான யுத்தத்திலிருந்து காப்பாற்றலாம் என்பதைக் கருணாகரத் தேவன் எடுத்துச் சொன்னபோது அடிகளாரும் கூடத்தானிருந்தார். ஓரிரு சமயங்களில் குறுக்கிட்டும் பேசிப் பார்த்தார்.

ஆனால் கருணாகரத்தேவன் வீராவேசம் கலந்த பேச்சுக்கு முன்பு அடிகளார் நாசூக்காகக் குத்திக் குத்திப் பேசிய பேச்சும் கேட்ட கேள்விகளும் பயனற்றுப் போயின. தேவன் சொன்னதில் அரசியல் உண்மை புதைந்து கிடந்ததை மழவராயன் கண்டான். அடிகளார் நறுக்கிட்ட சமயங்களிலெல்லாம் அவரை உஷ்ணமாகப் பார்த்து அடக்கினான். அப்படியும் அடங்காமல்தான் அடிகளார் தம் சாமர்த்தியத்தைக் காட்டினார்.



ஆனால், அது பலிக்கவில்லை. வீரபாண்டியனுக்குப் பெண்ணை மணம் முடித்துத் தருகிறேனென்று உறுதி கூறிவிட்டான் மழவராயன். அன்று முதல் வீரபாண்டியனை நேரில் ஒரு முறை பார்த்துவிட வேண்டுமென்று முடிவுக்கு வந்தார் அடிகளார். ஆனால் இத்தனை விபரீதமான சந்தர்ப்பத்தில் அவனைத் தான் பார்க்க நேரிடும் என்பதை மாத்திரம் அவர் அப்பொழுது உணரவில்லை. அவனைத் தான் சந்திக்க நேர்ந்த முறையை நினைத்த அடிகளார் தமக்குள்ளேயே நகைத்துக் கொண்டதோடு நில்லாமல் வீரபாண்டியனால் பாண்டிய நாட்டைக் காப்பாற்ற முடியாது என்ற முடிவுக்கும்

வந்தார். பார்த்த மாத்திரத்தில் யாரையும் எடை போடக்கூடிய அடிகளார். பாண்டிய நாடு அதிக நாட்கள் வீர பாண்டியன் கையிலிருக்காது என்று சந்தேகமறத் தெரிந்துகொண்டார். நாடற்ற ராணியாகக் கார்குழலி வாழ்வதிலும் அவருக்கு இஷ்டமில்லை.

அப்படி நாடற்ற ராணியாய் வாழ்வதானால் இவனுக்கு ஏன் அவள் மணமாலை சூடவேண்டும் என்று யோசித்துப் பார்த்தார். அபராஜிதனைக் காட்டில் சந்தித்த நாளாய்க் கார்குழலியின் போக்கைக் கவனித்த அவர், அவள் மனம் அவனிடம் பூரணமாக ஒன்றிவிட்டதை உணர்ந்து கொண்டிருந்தார். ஆகவே எப்படியாவது கார்குழலியைக் காப்பாற்ற வேண்டுமென்ற திடசித்தம் கொண்டு அதை அமுல் நடத்து முன்பு கார்குழலியை ஆசுவாசப்படுத்திவிட்டுச் செல்வோமென அவள் அறையை நோக்கி நடந்தார்.

அடிகளார் கார்குழலியின் அறையை அடைந்தபோதுதான் கார்குழலியும் தந்தையுடன் வாதாடிவிட்டுத் திரும்பியிருந்தாள். மழவராயனுடன் வாதாடியதால் மனம் சுக்கல் சுக்கலாக வெடிக்கத் தன் அறைக்குத் திரும்பிய கார்குழலி பஞ்சணையில் படுக்காமல் பலகணியில் சாய்ந்து நின்று நந்தவனத்தில் கண்களை ஓட்டிக் கொண்டிருந்தாள். நந்தவனத்தில் எத்தனை எத்தனையோ புஷ்பச் செடிகளும் மரங்களும் இருந்தாலும் ஒன்றுகூட அவள் கண்களுக்குப் படவேயில்லை. எல்லாம் சர்வ சூன்யமாகத் தெரிந்தன அவளுக்கு. பார்வை நினைப்பைப் பொறுத்தது. நினைப்பு நிலைகுலையும்போது பார்வையும் நிலைகுலைந்து போகிறது. மனம் சூன்யமானால் பார்வையும் சூன்யம்தான். உலகமே இருண்டு விட்டதுபோல் அவள் உள்ளம் நினைத்ததால் அவள் சம்பந்தப்பட்டவரை உலகம் இருண்டுதான் கிடந்தது. அவளுக்கு அடிகளார் உள்ளே வந்ததுகூடத் தெரியவில்லை. முதல் முறை, ''குழலி!'' என்று அவர் மெள்ள அழைத்ததுகூடக் காதில் விழவில்லை. இரண்டாம் முறை அவர் குரல் கொடுத்த பிறகுதான் அவள் திரும்பிப் பார்த்தாள்.

அந்த முகத்தைப் பார்த்த அடிகளாரின் பார்வையில் பரிதாபம் கலந்து நின்றது. மன்னர் மரபில் பிறந்த கார்குழலி உரமான குணம் படைத்திருந்தவளாதலால் உள்ளம் வெடித்துக் கொண்டிருந்த அந்தச் சமயத்தில் கூடக் கண்ணீர் பெருக்கவில்லை. கண்ணீர் பெருக்காவிட்டாலும் அவள் கண்கள் கலங்கி நின்றதை அடிகளார் கவனித்தார். சோகத்தின் காரணமாக முகமும் வெளுத்திருந்தது. மயிர் சிறிது கலைந்தால் கூடத் தலையைக் கோதிவிட்டுக் கொள்ளும் பெண்மைக் குணத்தைக்கூட அவள் அந்தச் சமயத்தில் கைவிட்டிருந்ததால் முன்னுச்சி மயிர் பத்துப் பதினைந்து சேர்ந்து முகத்தின் பக்கத்தில் பட்டையாகத் தொங்கிக் கொண்டிருந்தன. கழுத்தில் நேராகப் பதியாமல் பக்கத்தில் சிக்கியிருந்த ஓரிரண்டு ஆபரணங்களைக்கூடச் சரிப்படுத்தாமல் விட்டிருந்தாள் கார்குழலி. நிமிஷ நேரத்தில் இதையெல்லாம் கவனித்து, அவள் உள்ளப் போக்கை உணர்ந்து பரிதாபத்தால் மனம் கரைந்த அடிகளார், ''குழலி! எந்தக் கோட்டையைப் பிடிக்க யோசனை செய்துகொண்டிருக்கிறாய்? பணிப் பெண்களெல்லாம் எங்கே? எதற்காகத் தனியாக நின்று கொண்டிருக்கிறாய்?'' என்று வினவினார்.

கார்குழலி பலவந்தமாக ஒரு புன்முறுவலை வரவழைத்துக் கொண்டாள். ஒரு முறை அடிகளாரை ஏறெடுத்துப் பார்த்துவிட்டு மீண்டும் கண்களைத் தரையில் சாய்த்துக் கொண்டே, ''நேரமாகிவிட்டதென்று பணிப் பெண்களைப் படுக்க அனுப்பிவிட்டேன். எனக்குத் தூக்கம் வரவில்லை,'' என்றாள்.

''டிவி.யிலே நியூஸ் வாசிக்கிற வேலைக்காக இன்டர்வியூ போனீங்களே... என்ன கேள்வி கேட்டாங்க...?''

''சிரிக்காமப் பொய் சொல்லத் தெரியுமான்னு கேட்டாங்க...!''

—லட்சுமி ஆவுடைநாயகம்



''தூக்கம் வராததற்குக் காரணம்?'' என்று வினவினார் அடிகளார். எந்தக் காரணத்தைச் சொல்லுவாள்? வீர பாண்டியனிடம் அவதிப்பட்டதைச் சொல்லுவாளா? மழவராயன் பிடிவாதத்தைப் பற்றிச் சொல்லுவாளா? மனத்தில் புதைந்துகொண்டு தன்னைச் சதா அழைக்கும் அபராஜிதனின் அழகிய உருவத்தைப் பற்றிச் சொல்லுவாளா? எதைப் பற்றிச் சொல்லுவாள்? ஆனாலும் எதையோ சொல்ல வேண்டுமென்பதற்காக, ''காரணம் எதுவுமில்லை. அடிகளாரே!'' என்றாள்.

அவள் பேச்சை அடிகளார் அடியோடு நம்பவில்லை என்பதை அவர் முகம் மிகத் தெளிவாக எடுத்துக் காட்டியது. அத்துடன் அடிகளார் தன் குயுக்தியையும் சற்று எடுத்துக்காட்டத் தொடங்கி, ''குழலி! உனக்குத் தூக்கம் வராத காரணம் எனக்குத் தெரியும்,'' என்றார்.

கார்குழலி அவரை ஏறெடுத்துப் பார்த்தாள். ''எனக்குத் தூக்கம் வராத காரணம் உங்களுக்குத் தெரியுமா?'' என்று ஆச்சரியத்துடன் வினவினாள்.

''நன்றாகத் தெரியும்,'' என்றார் அடிகளார்.

''சொல்லுங்களேன் பார்ப்போம்!'' என்று கேட்டாள் கார்குழலி.

அடிகளாரின் அடுத்த சொல் அவளை ஓர் உலுக்கு உலுக்கியது. உடலில் ஒரு நடுக்கமும் ஓடியது. ''இலக்கியம்,'' என்று பதில் சொன்னார் அடிகளார்.

''இலக்கியமா?'' ஏதும் புரியாததுபோல் வினவினாள் கார்குழலி.

''ஆமாம், இலக்கியந்தான்!''

''எந்த இலக்கியம்?''

''வீரபாண்டியன் இலக்கியம்.''

தூக்கிவாரிப் போட்டது கார்குழலிக்கு. கேள்வி நிரம்பிய பார்வையொன்றை அடிகளார்மீது வீசினாள். அடிகளார் விவரிக்கத் தொடங்கி, ''நான் தோட்டத்துக்கு வந்தபோதுதான் வீரபாண்டியன் உன்னுடன் இலக்கியம் பேசிக்கொண்டிருந்தான். தமிழ் இலக்கியமாயிற்றே என்று ஆசையுடன் கேட்டேன். இலக்கியச் சர்ச்சை அத்தனை விபரீதத்தில் கொண்டுபோய் விடுமென்று முன்கூட்டி எனக்குத் தெரியாது. தெரிந்திருந்தால் சற்று முன்பாகவே தடுத்திருப்பேன். திடீரென நிகழ்ச்சிகள் ஏற்பட்டு வீரபாண்டியனைத் தள்ளிவிட்டு நீ ஓடிவிட்டாய் அல்லவா?'' என்று வினவினார்.

''ஆம்.''

''பாண்டியன் அத்துடன் விடவில்லை. எழுந்திருந்து உன்னைத் தொடர முயன்றான்; முடியவில்லை.''

''ஏன்?''

''நான் அவனை அணைத்துக் கொண்டேன்.''

புரிந்து கொண்டாள் கார்குழலி. தான் தப்பியதற்கு அடிகளாரே காரணம் என்பதைச் சந்தேகமறப் புரிந்து கொண்டாள். புரிந்து கொண்டதும் நன்றி ததும்பும் கண்களை அவருக்காக உயர்த்தினாள். அத்துடன் இன்னொரு சந்தேகமும் கேட்டாள்: ''நீங்கள் எதற்காகத் தோட்டத்திற்கு வந்தீர்கள்?''

தான் தோட்டத்துக்கு வர நேர்ந்த காரணத்தை விளக்கிய அடிகளார், ''கார்குழலி, பயப்படாதே. இந்த வீரபாண்டியனுக்கு உன்னை மணம் முடிக்க நான் ஒரு நாளும் சம்மதிக்க மாட்டேன்!'' என்றார்.

கார்குழலி துக்கம் நிரம்பிய புன்முறுவலொன்றை அவர்மீது வீசி, ''தந்தை தீர்மானித்துவிட்டார், அடிகளாரே!'' என்றாள்.

''தந்தையின் தீர்மானங்களை நான் மாற்றிவிடுகிறேன். வீரபாண்டியன் குணாதிசயங்களை எடுத்துச் சொல்லுகிறேன்.''



''அரசியலில் ஈடுபாடு கொண்ட டாக்டர் கிட்டே ஆபரேஷனுக்குப் போனது தப்பாப் போச்சு!

''ஏன்?''

''எமனுக்கு லஞ்சம் கொடுக்கணும்னு சொல்லி ஆயிரம் ரூபா தனியாக் கறந்துட்டார்!''

—சீர்காழி சாமா.

''நான் சொல்லியாகிவிட்டது!''

இந்தப் பதிலைக் கேட்ட அடிகளார் திகைத்துப்போய், ''என்ன, நந்தவனத்தில் நடந்ததைச் சொல்லி விட்டாயா?'' என்று வினவினார்.

''அது மாத்திரமல்ல, விவாக சம்பந்தமாகச் சகலத்தையும் பற்றி விவாதித்துவிட்டேன்.''

''தந்தை என்ன சொல்கிறார்?''

''விவாகம் என்னையும் வீர பாண்டியனையும் பொறுத்ததல்லவாம்.''

''பின் யாரைப் பொறுத்த தாம்?''

''மழவ நாட்டையும் பாண்டிய நாட்டையும் பொறுத்ததாம்.''

''ஓகோ!''

''ஆமாம், அடிகளாரே! இப் பொழுது திருமணம் மதுரைக்கும் மேலை மங்கலத்துக்கும்தான்.''

வேதனை ததும்பும் அவள் மதிவதனத்தைப் பார்த்த அடிகளார் நீண்ட நேரம் ஏதோ யோசனை செய்தார். சற்று நேரம் அறையில் உலாவினார். அறைக் கோடிக்குச் சென்று பலகணி வழியாக வெளியே தோட்டத்தை நோக்கினார். பிறகு திரும்பி அறைச் சுவர்களைக் கவனித்தார். திடீரென ஓர் இடத்தில் ஸ்தம்பித்து நின்றார். சுவரின் ஒரு பகுதியை நெருங்கிப் பார்த்தார். பிறகு, ''கார்குழலி! அறைக் கோடியிலிருக்கும் விளக்கை எடுத்து வா,'' என்றார். கார்குழலி தலையை நிமிர்த்தி அடிகளாரைப் பார்த்தாள். அவர் சுவரில் எதையோ பார்த்து மலைத்து நிற்பதைக் கண்டு அது என்னவென்பதைக் கவனிக்க ஆவல் கொண்டு அவர் கூறியபடியே தீபத்தை எடுத்து வந்தாள். அந்தத் தீபத்தைக் கையில் வாங்கிக்கொண்டு சுவரிலிருந்த சித்திரத்தை நன்றாக ஆராய்ந்தார். ''குழலி! இதைப் பார்த்தாயா?'' என்று வினவினார் முடிவில்.

''பார்த்தேன். ஆனால், இதில் என்ன இருக்கிறது?'' என்று கேட்டாள் கார்குழலி, ஏதும் புரியாமலே.

''உன் விடுதலைக்கு வழி இருக்கிறது,'' என்றார் அடிகளார்.

''இந்தச் சித்திரத்தின் மூலமா?''




ராஜீவ் காந்தி தமிழ்நாட்டில் சுற்றுப் பயணம் செய்கிறபோது, எல்லா இடங்களிலும் மக்களின் கூட்டம் அலைமோதியதற்குக் கலைஞரும் ஒரு காரணம் என்ற பேச்சு அடிபடுகிறதே, ஆச்சரியமாக இல்லை?

நட்டுவாக்காலி நாச்சிமுத்து: பிரதமர் செல்லுகின்ற வழியெல்லாம் கூட்டம் கூட்டமாக நின்று கை அசைத்து வரவேற்புக் காட்டும்படி, கருணாநிதி தன் கட்சியின் அடிமட்டத் தொண்டர்களுக்கு ரகசிய உத்தரவு போட்டிருக்கிறாராம். ராஜீவ் காந்தி மக்கள் கூட்டத்தைப் பார்த்து ஏமாந்து போய், காங்கிரஸ் தனித்துப் போட்டியிடலாம் என்ற முடிவை எடுக்க இப்படி ஓர் ஏற்பாடாம். இது எப்படி இருக்கு?

கருணாநிதியோடு, அகில இந்திய முஸ்லிம் லீக் தலைவர் சுலைமான் சேட் டெலிபோனில் தொடர்பு கொண்டு, நிச்சயம் தி.மு.க.வோடு உறவு உண்டு என்று உறுதிப்படுத்தினாராமே?

நட்டுவாக்காலி நாச்சிமுத்து: காங்கிரசை ஆதரித்து வேலூர் கூட்டங்களில் பேசித் தன் ஆதரவைப் பகிரங்கமாகத் தெரிவித்துவிட்ட அப்துஸ் சமது என்ன செய்வார்? தனிக் கட்சி, தனிக் கொடி என்று பிரிவாரா அல்லது கலைஞரோடு எனக்கென்ன பிணக்கு என்று திரும்பவும் ஒட்டுவாரா?

'நால்வர் அணி' திரும்பவும் செல்வியோடு சமரசம் செய்து கொண்டு ஒத்துப்போக, முன்னாள் சத்துணவு அமைச்சர் சௌந்தரராஜன் பரபரப்பாகச் செயல்படுகிறாராமே?

நட்டுவாக்காலி நாச்சிமுத்து: செல்வி மீது கொண்டிருந்த திருநாவுக்கரசின் கோபமும் தணிந்திருக்கிறதாம். 'கருணாநிதியை எதிர்த்து வெற்றிபெற என்ன வழி? அதைப் பற்றி யோசிக்காமல் அனாவசியமாகச் செல்வியைப் புறக்கணிப்பானேன்' என்கிற சிந்தனை மலர்ந்திருக்கிறதாம்!

—லிப்ரன்

''ஆம்.''

கார்குழலிக்கு ஏதுமே புரியவில்லை. அவர் முகத்தில் தன் கண்களைப் பதியவிட்டாள். அந்தக் கண்களில் எழுந்த கேள்விக்கு அடிகளார் உடனே பதில் சொல்லவில்லை. தீபத்தைப் பழைய இடத்தில் கொண்டுபோய் வைக்கச் சொல்லிக் கார்குழலிக்கு உத்தர விட்டார். பின்பு அவளை மஞ்சத்தில் உட்காரச் சொல்லித் தாம் எதிரே நின்று கொண்டு பேசலானார்.

''குழலி! நான் துறவியென்பது உனக்குத் தெரியும்,'' என்று ஆரம்பித்தார்.

''தெரியும்,'' என்றாள் குழலி.

''ஆனால் சகலத்தையும் துறந்த என்னை இரு பாசங்கள் பிடித்து வாட்டுகின்றன...''

குழலி பதிலேதும் சொல்லவில்லை. அடிகளாரே தொடர்ந்து சொன்னார்: ''ஒன்று, தமிழ்நாட்டின் பிற்கால நன்மை, இரண்டு, உன் நன்மை. குடும்பத்தை உதறிய எனக்குத் தமிழ்நாடு என்ற பெரிய குடும்பம் வாய்த்தது. பெண் முறைக்கு நீயும் வாய்த்தாய். இந்தப் பந்தங்களிலிருந்து என்னால் விடுபட முடியவில்லை. வீரபாண்டியனால் தமிழ் நாட்டுக்கு நன்மை உண்டென்று எனக்குத் தெரிந்தால் உன் நன்மையை நான் தியாகம் செய்வேன். ஆனால், வீரபாண்டியனிடம் எனக்கு நம்பிக்கையில்லை. ஆகவே உன் திருமணத்தை உடைக்கத் தீர்மானித்து விட்டேன். தீர்மானித்தவன் வழி தெரியாமல் திண்டாடினேன். கடவுள் ஒரு வழியையும் காட்டிவிட்டார். அதோ, அந்தச் சித்திரம். அதில் இருக்கிறது உனது விமோசனம்,'' என்றார் அடிகளார்.

''அது எப்படி என்னைக் காப்பாற்றும்?'' என்று வினவினாள் கார்குழலி.

''குழலி, நீ தமிழ்நாட்டுப் பெண். இந்த நாட்டில் எத்தனையோ வீர ஸ்திரீகள் பிறந்திருக்கிறார்கள். அவர்கள் நிலைக்கு நீ உயர்ந்தால் காரியத்தைச் சாதிக்கலாம்.''

கார்குழலி ஏதோ யோசித்தாள்.

''எதற்கும் தயாராக இருக்கிறேன், அடிகளாரே!'' என்றாள் இறுதியில்.

''எந்தத் தியாகத்திற்குத் தயாரா?''

''தயார்.''




''நான் ஓர் இளம் விதவைக்கு வாழ்வளிக்க ஆசைப்படறேன்!''

''உன்னோட இந்த நல்ல குணத்தை நான் பாராட்டறேன்!''

''சரி, நீ எப்ப சாகப் போறே?''

—கிழை. அ. கதிர்வேல்

---

''தந்தையை உதறக்கூட?''

''அவசியமானால் அதற்கும் தயார்.''

''சரி, அப்படியானால் உன் அந்தப்புரத்துத் திட்டி வாசல் சாவியைக் கொடு.''

தலையணையின் கீழிருந்து சாவியை எடுத்துக் கொடுத்தாள் கார்குழலி. அதைப் பெற்றுக்கொண்டு நேராகத் தன் அறைக்குச் சென்ற அடிகளார் பெரிய காவித் துப்பட்டியை எடுத்துத் தலை முதல் கால் வரை போர்த்துக்கொண்டு சப்தம் போடாமல் திட்டி வாசலை நோக்கி நடந்தார். திட்டி வாசலை வெகு ஜாக்கிரதையாகத் திறந்து வெளியே வந்து மேலைமங்கலத் தெருக்களில் பலவற்றைக் கடந்து வேகமாகச் சென்று மறவர் குடிசைகள் இருக்குமிடத்திற்கு வந்து ஒரு குடிசையின் கதவைத் தட்டினார். கதவைத் திறந்த வாலிபனை நோக்கி, ''உம், சீக்கிரம் மேலே போர்வையை அணிந்துகொண்டு கிளம்பு!'' என்றார். வாலிபனும் கிளம்பினான். அவனை அழைத்துக்கொண்டு திட்டிவாசல் வழியாக மீண்டும் உள்ளே நுழைந்த அடிகளார் கார்குழலியின் அறையை நோக்கிச் சென்றார். போர்த்துக் கொண்டு திருட்டுத்தனமாகச் சென்ற அந்த இருவரும் அந்தப்புரத்துக்குள் நுழைந்ததைத் திட்டிவாசல் பக்கத்தில் மறைந்திருந்த மற்றொரு உருவம் கவனித்ததோடு நில்லாமல் அவர்களைப் பின் தொடர்ந்தும் சென்றது.

(தொடரும்)



# அந்தப் பெண்ணை மறக்க முடியாது

விடியற்காலையின் முகம் தெரியாத இருட்டு.

ணிங்... ணிங்... ணிங்...

வெளியே பால் விற்கும் ராகவனின் மணியோசை.

நான் எழுந்திருக்குமுன் படுக்கையை விட்டு என் மகள் ராதா சட்டென்று எழுந்தாள். பாத்திரத்தை எடுத்துக்கொண்டு வெளியே சென்றவள், பாலுடன் திரும்பி வந்து, மூடி வைத்துவிட்டு 'பால் வாங்கியாச்சம்மா' என்று சொல்லிவிட்டுப் படுக்கையில் சாய்ந்தாள்.

ராகவனுக்கு வயது இருபத்தைந்து இருக்கும். களையான முகம். பட்டப்படிப்பை முடித்தவுடன் வேலைக்காகப் பல இடங்களில் மோதிப் பார்த்துவிட்டு, கிடைக்காது என்று தெரிந்தவுடன் பால் கேனை எடுத்துச் சைக்கிளில் கட்டிக்கொண்டு வீடு வீடாக வினியோகம் செய்து வந்தான். நல்ல பிள்ளை.

சரியாக ஐந்து மணிக்கு வீட்டின் முன் வந்து மணியடிப்பான்.

பெரும்பாலும் ராதாதான் பால் வாங்குவாள். சில நேரங்களில் நான் போவேன்.

என்னுள் ஓர் ஆசை.

இவனையே ராதாவுக்குத் திருமணம் செய்து கொடுத்தால் என்ன?

எல்லாம் நல்லபடியாக முடிந்தால், திருமணத்திற்குப் பிறகு இவனுக்குச் சொந்தமாக ஒரு பிஸினஸ் தொடங்கித் தரலாம். என் கணவர் அதற்கு உதவி செய்வார்...

அன்று பால் வாங்கிக்கொண்டிருந்த போது ராகவன் சொன்னான்:

''நாளையிலிருந்து நான் வரமாட்டேன்.''

அதிர்ச்சியுடன் கேட்டேன்: ''ஏன்?''

''நான் ஒரு பொண்ணை விரும்பறேன். வீட்லே சொன்னேன். அப்பா செருப்பை எடுத்துட்டு அடிக்க வந்துட்டார். என்னால அந்தப் பொண்ணை மறக்க முடியாது. ரெண்டு பேரும் நாளை ஊரைவிட்டு போகப் போறோம்...''

எனக்கு ஏமாற்றமாக இருந்தது. அதைக் காட்டிக் கொள்ளாமல், ''போயிட்டு வாப்பா. உனக்கு எந்தக் குறையும் இருக்காது. நீ நல்லாயிருப்பே...'' என்றேன்.

மறுநாள். பொழுது விடியத் தொடங்கியது.

ராகவனின் மணியோசையை கேட்காதது எதையோ இழந்துவிட்ட உணர்வை என்னுள் எழுப்ப—

திரும்பிப் பார்த்தேன். அருகே ராதாவைக் காணோம்.

படுக்கையில் ஒரு கடிதம். அவசரமாகப் பிரித்தேன்.

''அம்மா.

என் காதலை உங்களிடமும் அப்பாவிடமும் தெரிவிக்கும்படி அவர் கூறியும் எனக்குத் துணிவில்லை. நான் ராகவனோடு போகிறேன்.

—ராதா.''

ஜெயவண்ணன்

என் கணவருக்கு ஆணுறை அணியவே வெறுப்பு. அவரைக் கட்டாயப்படுத்தி அணியச் சொன்னால் எங்கே என்னையும் வெறுத்துவிடுவாரோ என்று பயமாக இருந்தது!

நான் என்ன செய்வது? 'ரிதம்' முறையும் சரிப்பட்டு வரவில்லை. 'வித்ட்ராவல்' முறையோ மிக ஆபத்தானது. என் கணவரோ என்னை 'லூப்' அணியும்படி கூறினார். ஆனால் சுபாவத்திலேயே கூச்சம் நிறைந்தவளாக இருந்ததால் இதற்காக டாக்டரிடம் செல்லவும் சங்கோசமாக இருந்தது. இறுதியாக கர்ப்பத்தடை மாத்திரை உட்கொண்டு பார்த்தேன். அதையே வழக்கமாக்கிக்கொள்ள தயக்கமாக இருந்தது... ஏதேனும் பக்க விளைவுகள் ஏற்படுமோ எனும் அச்சம்வேறு.

இவை எல்லாமாக என்னுள் பெரும்குழப்பத்தை ஏற்படுத்திய தோடல்லாமல் என் கணவரின் தேவைகளைப் பூர்த்தி செய்ய இயலாத குற்ற உணர்வு வேறு என்னை உறுத்தியது... விருப்பத்திற்கு இணங்கினால் எங்கே அநாவசிய கர்ப்பம் ஏற்பட்டு விடுமோ என்கிற பய உணர்வு. சொல்லவும் முடியாமல் மெல்லவும் முடியாமல் இருதலைக் கொள்ளி எறும்பாகத் தவித்தேன்.

ஆனால் இதற்கெல்லாம் முற்றுப்புள்ளி வைத்ததுபோல், என் கணவர் ஒரு நாள் 'டுடே'யை என்னிடம் கொடுத்தார். இதழில் குறுநகை தவழ நமட்டுச் சிரிப்புடன் அவர் கூறினார்— "வெளிநாட்டில் மிகப் பிரபலமாக உள்ள கருத்தடை முறை இப்போது இந்தியாவிற்கும் வந்துவிட்டது. இனி ஒரு பிரச்சினையும் இல்லை".

என்னைப் பொறுத்தவரை இது புதுமையான விஷயம்தான். மிகச் சிறிய வில்லை வடிவில் உள்ள இதை பாதுகாப்பு தேவைப்படும் தருணத்தில் அந்தரங்கமாகவும், எளிதாகவும் உடலில் பொருத்திக் கொள்ளலாம். ஆற்றல் மிக்கது அத்துடன் பக்க விளைவுகள் ஏதும் ஏற்படாது!

எத்தனை சாமர்த்தியமாக என் கணவர் இப்பிரச்சினைக்கு ஒரு முடிவு கண்டார் பார்த்தீர்களா! குறும்புக்காரர்! இனி எல்லாமே உன் கையில்தான் இருக்கிறதம்மா என்று கூறிவிட்டு "ஆஹா! இப்பவே உன் முகம் மலர்ந்துவிட்டதே" என கிண்டலும் கேலியும் வேறு!

எப்படியோ, அவர் சொன்னது பொய்க்கவில்லை! புதுப்பிறவி எடுத்த பெண்மையின் முழு உருவை அவர் கண்டு கொண்டு விட்டார்— அதாவது என்னை!

# டுடே

## பெண்களின் அந்தரங்கக் கருத்தடை சாதனம்.




ப்ளிஸ் கெமிகல்ஸ் அண்ட் ஃபார்மஸ்யூட்டிகல்ஸ் இந்தியா லிமிடெட்
ஸ்கைபேக் ஹவுஸ், ஆஃப் எம். வாசன்ஜி ரோடு, மரோல்,
அந்தேரி (கிழக்கு) பம்பாய்-400 059.

Avenues TC 53 88

